63

# ஹோமம்

இந்த வீட்டிற்குக் குடிவந்து ஏறக்குறைய ஏழு வருஷங்கள் ஆகிவிட்டன. குடிவந்த புதிதில் புழக்கடைச் சாக்கடை இந்த அளவுக்கு ஆழமாய், அடர்ந்து திரண்டு தேங்கி, வயிற்றைக் குமட்டுகிற அளவுக்கு நாற்றமெடுத்ததாய் ஞாபகம் இல்லை. ஆனால் அப்போதும் இந்தச் சாக்கடை இருந்தது; சின்னதாய், கிணற்றடியில் கால் அலம்புகிற, புடவை பிழிகிற, பாத்திரம் கழுவுகிற நீர் மட்டும் நெளிந்து நெளிந்து ஒரு மெல்லிய ஓடையாய் ஒதுங்கி, ஊர்ந்து தெருவில் போய் விழுகிற அளவுக்கு, இப்போது அந்தச் சாக்கடை தான் இப்படி உக்கிரமாய் வளர்ந்து விசுவருபமெடுத்து வீடு முழுசையுமே வியாபித்துக் கொண்ட மாதிரி, இவ்வளவு அகலமாய்க் காலைப் பரப்பிக் கொண்டு கொல்லைப்புறக் கதவைத் திறந்த உடனேயே கண்முன் நிற்கிறது.

**எஸ்.எம்.ஏ. ராம் (1951)** என்னும் சங்கமேஸ்வரன் மோகன் அனந்தராமன் சுமார் பதினைந்து சிறுகதைகளை எழுதியுள்ளார். மன்னார்குடியில் பிறந்து வளர்ந்தவர். தொடக்கத்தில் *தினமணி கதிரில்* சிறுகதைகளை எழுதத் தொடங்கினார். கரிச்சான்குஞ்சு அவர்களைத் தமது முன்னோடியாக இவர் கருதுகிறார். அவருடன் பேசிப் பழகிய பிறகே தமது படைப்புலகம் பற்றிய புரிதலைப் பெற்றதாகக் கூறுகிறார். கரிச்சான்குஞ்சு அறிமுகப்படுத்திய *பிரக்ஞை, கணையாழி* ஆகிய இதழ்களை வாசித்த பின்பு தம்மளவில் பெரும் மாற்றத்தை ஏற்படுத்தியதாகக் கருதுகிறார். இவர் நாடகங்களை எழுதியுள்ளார். இரண்டு நாடகப் பிரதிகள் அச்சாகியுள்ளன. இவரது நாடகங்களைச் சில நாடகக்குழுக்கள் மேடையேற்றியுள்ளன. *வெளிவட்டம்* என்னும் நாவலை இவர் எழுதியுள்ளார். நவீன இலக்கியம் தொடர்பான பிரக்ஞையுடன் வாழ்கிறார்.

வந்த புதிதில் இந்தச் சாக்கடையை நான் ஏன் அவ்வளவு பெரிசுபடுத்தவில்லை என்பதற்கு எனக்குச் சரியான காரணம் தெரியவில்லை. ஒரு வேளை, அப்போது இந்தச் சாக்கடையின் ஆதிக்கம் வெளிப்படையாய்த் தெரியாத அளவுக்கு, வேறு சுகந்தமான விஷயங்கள் சுற்றுப்புறத்தில் அதிகமாக இருந்திருக்கக் கூடும். கிணற்றைச் சுற்றி நிறைய மணம் வீசும் புஷ்பச் செடிகள் அப்போது இருந்தன. நாலைந்து வாழை மரங்கள், அவற்றின் பசிய அகன்ற இலைகளோடு புஷ்பச் செடிகளுக்கு இடையில் நின்று கொண்டிருக்கும். நான் வந்த புதிதில் ஒரு வாழை மரம் குலைதள்ளிக் கூட இருந்தது. அந்தக் காட்சியை விடிகாலை சூரிய கிரணங்களூடே பார்த்துக் கொண்டிருப்பதே ஒரு சுகானுபவமாக இருக்கும்.

வீட்டுக்காரப் பாட்டி ஜாக்கிரதையாய் காலை ஊன்றி ஊன்றி வைத்து, வாழை மரங்களைத் தாண்டிப் போய், காம்பவுண்ட் சுவர் பக்கமாய் வளர்ந்திருக்கும் பவழமல்லிச் செடியிலிருந்து பூஜைக்குப் புஷ்பங்கள் பறித்துச் செல்வாள். வீட்டிற்கு விருந்தாளி வந்தால் ஒரு சின்னக் கத்தியை என்னிடம் கொண்டு வந்து கொடுத்து, 'நீங்கள்தான் ரொம்ப உசரமா இருக்கேள், ரெண்டு வாழை எலை நறுக்கிக் கொடுங்கோளேன்...' என்பாள்.

இப்போது அந்த வாழை மரங்களில் ஒன்றுகூட இல்லை. எல்லாம் பட்டுப்போய் விட்டன. அவற்றை உயிர்ப்பிப்பதற்கோ, புதிய கன்றுகளை நடுவதற்கோ இங்கிருப்பவர்கள் யாரும் முயற்சிக்கவில்லை. பவழ மல்லிச் செடி ஒன்றைத் தவிர மற்ற புஷ்பச் செடிகள் எல்லாம் எப்படியோ காணாமல் போய்விட்டன. அவை இருந்த இடங்களை எல்லாம் அன்றைக்குச் சின்னதாய் இருந்த இந்தச் சண்டை இப்போது பெரிசாய் ஆக்கிரமித்துக் கொண்டுவிட்டது.

ஆனால், இந்த அபாயகரமான வளர்ந்து வரும் சாக்கடையின் ஆதிக்கம் என்னைத் தொந்தரவு பண்ணு

கிற மாதிரி, இந்த வீட்டில் இருக்கிற மற்ற யாரையும் தொந்தரவு செய்வதாய்த் தோன்றவில்லை. அவர்களின் அன்றாட அலுவல்கள், பூஜைகள், சுலோக பாரா யணங்கள், சுமங்கலிப் பிரார்த்தனைகள், வருஷாந்திர தெவசங்கள் எல்லாம் ரொம்பக் கிரமமாய் யந்திர ரீதியாய் டைம்டேபிள் போட்டுக் கொடுத்தாற்போல் அவை பாட்டுக்கு நடந்து கொண்டிருந்தன. தினமும் விடிகாலையில் பாட்டி கிணற்றடியில் குளித்து முழுகி, ஈரத்தலையோடு, வாயில் ஒரு சுலோகத்தை முணு முணுத்தபடியே அந்தச் சாக்கடையை ரொம்ப சிரமப் பட்டுத் தாண்டி அந்தப் பக்கம் போய் பவழமல்லிச் செடியில் பூஜைக்காகப் பூப்பறிப்பதும் தொடர்ந்து கொண்டிருந்தது. பூக்களோடு திரும்புகையில் பேரப் பிள்ளை விழுப்பு டிராயரோடு எதிரில் வந்தால், 'கடங் காரா, என் மேல பட்டுடாதே, நான் மடி...' என்று பாட்டி கூச்சல் போடுவதும் மாறாமலேயே இருந்தது.

இந்த இடத்தில், இந்தக் காம்பவுண்டுக்குள் வசிக்கிற மனிதர்களைப் பற்றியும் அவர்களின் குணாதிசயங் களைப் பற்றியும் நான் சற்று விவரித்தாக வேண்டும். இந்த வீட்டில் மொத்தம் நான்கு போர்ஷன்கள். மனைக்கட்டு கிட்டத்தட்ட மூணரை கிரவுண்டு தேறும் (என்ன காரணத்தாலோ இன்னும் எந்த Flat Promoter- ன் அருட்பார்வையும் இந்த வீட்டின்மீது படவில்லை). கீழே இருக்கிற மூன்று போர்ஷன்களில் முதல் போர்ஷனில் நான், என் மனைவி இரண்டு குழந்தைகள்; நடுப் போர்ஷனில் வீட்டுக்காரரின் வயதான அப்பா, அம்மா (இந்தக் கதையில் தாத்தா, பாட்டி என்று குறிப்பிடப்படுபவர்கள்). புதிதாய்க் கல்யாணம் ஆன கடைசிப் பிள்ளை, மருமகள், அவர்களின் ஒன்றரை வயதுக் குழந்தை. கடைசிப் போர்ஷனில் வீட்டுக்காரனின் பரமவைதீகமான, வயது முதிர்ந்த மாமாவும் மாமியும் (இந்தக் கதை யில் இனிமேல் மாமா, மாமி என்று குறிப்பிடப் படுகிறவர்கள்).

மாடிப் போர்ஷன், வீட்டுக்காரருடையது. கீழ்ப் போர்ஷனில் இருக்கிற தாத்தாவின் சீமந்த புத்திரன். தாத்தா ஆரம்ப காலத்தில் கணக்குப் பிள்ளையாக இருந்து, முந்திய அரசாங்கத்தின் திடீர் நடுராத்திரி ஆணையால் தனது பதவியைப் பறிகொடுத்தவர். கிராமத்தில் இருந்த தனது நிலங்களை விற்றுக் கிடைத்த ஒரு சொற்பத் தொகையோடு சென்னை வந்தவர். பெரியவரின் முதலீடும் ஓரளவுக்கு இந்த வீட்டின் கொள்முதலில் இருந்தாலும், பெரும்பங்கு பெரிய பிள்ளை தன் ஆபீஸில் கடனாய் வாங்கியது என்று பேசிக் கொண்டார்கள். அந்தக் காரணத்தாலேயே மனைக்கட்டு பெரிய பிள்ளையின் பேரில் இருந்தது. இரண்டாவது பிள்ளை தன் பெண்டாட்டியுடன் வெளியே எங்கோ தனியாய் இருந்தான். எப்போதாவது வந்து, இவ்வளவு பெரிய வீடு மூத்தவனுக்கு மட்டும் சொந்தமானதற்குக் கிழவரைப் பொறுப்பாளி ஆக்கி ஆத்திரம் தீர வாசலில் நின்று தெருவுக்கே கேட்கிற மாதிரிச் சத்தம் போட்டு விட்டுச் செல்வான். தாத்தா பாட்டிக்கு சொந்த பந்தம் ஏராளம். ஏதாவது ஒரு விசேஷமென்றால் வீடு அடைக்க கூடி விடுவார்கள். எல்லோருக்குமே சொல்லி வைத்த மாதிரி தெய்வபக்தி ஓவர்டோஸ். அதைத் தெய்வ பக்தி என்று சொல்வதை விட, ஆசார அனுஷ்டான ஆரவாரம் என்று சொல்வது சரியாய் இருக்கும். வருஷம் முன்னூற்று அறுபத்தைந்து நாட்களும் பண்டிகை பருவம் என்று ஏதாவது ஒரு சடங்கு வீட்டில் நடந்து கொண்டிருக்கும்.

கடைசிப் போர்ஷனில் இருக்கும் மாமா வைதீக காரியங்களைச் செய்வதற்காகவே அவதாரம் எடுத்த மாதிரி இருக்கும். விடிகாலை மூன்று மணிக்கே எழுந்து குளித்துவிட்டு கிட்டத்தட்ட நாலுமணி நேரமாவது தினமும் பூஜை செய்வார். அவர் பூஜை செய்கிற அமர்க்களம் அந்தத் தெரு முழுவதும் கேட்கும். அனேகமாய் பதினெட்டு புராணங்களிலும் இடம் பெற்றிருக்கிற அத்தனை தெய்வங்களின் பேரையும்

சத்தம் போட்டுக் கூப்பிடுவார். கூடவே ஜால்ரா சத்தம் வேறு கேட்கும். வீட்டுக்காரப் பாட்டி, மாமாவின் சொந்தத் தங்கை. பூஜை முடிந்தவுடன் பாட்டி, தாத்தா, பிள்ளைகள் எல்லாம் பயபக்தியோடு போய்த் தீர்த்தம் வாங்கிச் சாப்பிடுவார்கள்.

இந்த தீர்த்த விவகாரத்தையும் கொஞ்சம் நான் சொல்லியாக வேண்டி இருக்கிறது. மாமா இந்த தீர்த்தத்தைக் குழாயில் பிடிக்கிற சுவாரஸ்யமே தனி. நான் முதலில் குறிப்பிட்ட, இந்தக் கதையின் பிரதான கதாநாயகனான சாக்கடைக்கு வெகு அருகில் தரையை ஒட்டி ஒரு தொட்டி கட்டி அதற்குள் தெருவிலிருந்து வீட்டுக்குள் பாலாற்று நீரைக் கொண்டுவரும் குழாயை வைத்திருந்தார்கள். சாக்கடையின் துர்நாற்றத்தைச் சகித்துக் கொண்டோ அல்லது அந்தப் பிரக்ஞை யின்றியோ தான் நீங்கள் அந்தத் தொட்டியில் இறங்கி நீர் பிடிக்க வேண்டும். கடைசிப் போர்ஷன் மாமா விடியற்காலை குழாயில் நீர் வருகிறபோது முதல் ஆளாக தான் ஒரு குடம் தண்ணீர் பிடித்து உள்ளே கொண்டுபோய் சுவாமிக்கு முன்னால் வைத்துக் கொள்வார். சுவாமிக்கு அபிஷேகம் ஆராதனை எல்லாம் அந்த ஜலத்தில்தான். பூஜை முடிந்து எல்லோரும் போட்டி போட்டுக் கொண்டு வாங்குகிற தீர்த்தமும் அதுதான். அந்த ஜலத்துக்கு வீட்டில் உள்ளவர்கள் 'மடிஜலம்' என்று பெயர் வைத்திருந்தார்கள். யார் ஜலம் பிடிக்க வருகிறபோதும், பிடிப்பதற்கு முன்னால் 'மடிஜலம் பிடிச்சாச்சா?' என்று முன்னெச்சரிக்கையோடு கேட்டு நிச்சயம் செய்துகொண்டே பிற்பாடே அவர்கள் பிடிப்பார்கள்.

சுகாதாரம் என்கிற விஷயத்தில் எல்லாரைக் காட்டிலும் பாட்டி ஏனோ ரொம்பவும் விரோதம் கொண்டிருந்தாள். பாட்டியைப் பொறுத்தவரை 'மடி'யாய் இருக்கிற திருப்தியே போதுமானது. முன்னால் சொன்னதைப் பற்றி எல்லாம் பாட்டிக்கு எதுவும் தெரியாது. வீட்டைச் சிரத்தையாய்ப் பெருக்கி குப்பையை

ஒரு முறத்தில் அள்ளி, காம்பவுண்டுக் குள்ளேயே இருக்கும் வேப்ப மரத்தடியில் கொட்டுவாள். தலை வாருகிற போது கையோடு வரும் தனது வெள்ளை முடியை எல்லாம் விரலில் லாகவமாய்ச் சுற்றி அதை ஒரு சின்னப் பந்தாய் உருட்டி ஜன்னல் வழியாய் வாசல் பக்கமாய் விட்டெறிவாள். அந்தப் பந்து சில சமயங்களில் காற்றால் திசை திருப்பப்பட்டு எங்கள் போர்ஷனுக்குள் வந்துவிடும். கக்கூசுக்குப் போனால் தண்ணீரைக்கூட சரியாய் ஊற்றமாட்டாள். பின்பக்கக் கதவைத் திறந்தால் குப்பென்று மூக்கைத் துளைக்கிற மாதிரி, பக்கத்துப் போர்ஷன் கக்கூஸிலிருந்து ஒரு வாடை வரும்.

வீடு முழுவதும் தோரணங்கள் மாதிரி மேலே கொத்து கொத்தாய் ஒட்டடைகள் தொங்கும். கூடத்தில் தாறு மாறாய்த் துணிகள் இறைந்து கிடக்கும். எப்போதோ குழந்தை போன மலமும் மூத்திரமும் தரையில் வெகு நேரம் எடுக்கப்படாமலேயே கிடக்கும். இத்தனை அலங்கோலங்களுக்கு மத்தியில் பாட்டியும் தாத்தாவும் மட்டும் எப்படி 'மடி'யாய் இருக்கிறார்கள் என்பது என் சிற்றறிவுக்குப் புரியவே புரியாது.

ஒருநாள், அந்த மாதத்து வாடகையைக் கொடுக்க மேலே போன பொழுது, இதற்கு மேலும் பொறுப்பதில் அர்த்தம் இல்லை என்று கருதி, வீட்டுக்காரரிடம் சாக்கடை விவகாரத்தை மெதுவாக ஆரம்பித்தேன். வீட்டுக்காரர் வெற்றிலையை மென்று கொண்டே நான் சொன்னதைத் தலையை மட்டும் ஆட்டிய வண்ணம் கேட்டுவிட்டு, வெற்றிலைச் சாற்றைத் துப்புவதற்காக வெளிப்புறம் போய்விட்டு மறுபடியும் உள்ளே வந்தார்.

'எனக்குத் தெரிஞ்சு இந்த சாக்கடை இந்த வீட்டை வெலைக்கு வாங்கி, நாங்க குடித்தனம் வந்த அன்னிலே யிருந்து இருக்கு...' என்று அவர் பேச ஆரம்பித்தார்.

நான் சொன்னேன்: 'அப்ப ரொம்பச் சின்னதாக இருந்திருக்கும். இவ்வளவு பெரியசா இருந்திருக்காது...'

'பின்னே வேற எப்படி இருந்திருக்க முடியும் சொல்லுங்கோ... அப்ப இப்பத்தைவிட பாப்புலேஷன் கம்மி... நம்மாத்துப் பாப்புலேஷனைச் சொல்றேன். அப்போ இந்த மாடி போஷன் கட்டலே. கீழே ஒரு போஷனை மட்டும் வாடகைக்கு விட்டுட்டு மத்த ரெண்டு போர்ஷனையும் நாங்களே வச்சிண்டிருந்தோம். எனக்கு அப்ப கல்யாணம் ஆகலே. அப்புறம் எங்க மாமா மாமியும் இங்கவரல்ல...'

'அதெல்லாம் சரி, இன்னிக்கு இருக்கிற நெலமையைத் தான் கணக்குல எடுத்துக்கணும். உங்க வீட்டுலயும் குழந்தைகள் இருக்கு, எங்க வீட்டுலயும் குழந்தைகள் இருக்கு. சாயங்காலம் அஞ்சு மணி ஆனா சாக்கடை யில் மொய்க்கிற கொசுப்பட்டாளம் எல்லாம் ஜன்னல் வழியாக வீட்டுக்குள்ளே வந்துடறது. குடிக்கிற ஜலம் பிடிக்கிற தொட்டியைவேற சாக்கடையை ஒட்டின மாதிரி கட்டி வச்சிருக்கேள். நாளைக்குக் குழந்தை களுக்கு ஒரு வியாதி வெக்கன்னா நாம் தானே அதுக்கு செலவு செஞ்சாகணும். ஏன் நம்ம உடம்புக்கே கூட எதுவும் வரக்கூடாதுன்னு என்ன நிச்சயம்? சரி, அதை யெல்லாம் விடுங்கோ. கொல்லைக் கதவைத் தெறந்தா அடிக்கிற நாத்தத்தைச் சொல்லுங்கோ...'

வீட்டுக்காரர் சற்றுநேரம் பேசாமல் இருந்தார். பிறகு, 'நாம் நல்லதையே நெனப்போமே சார். வியாதி வரணும்னு இருந்தா, நீங்க எவ்வளவு ஜாக்கிரதையா இருந்தாலும் வரும்...' என்றார்.

எனக்குத் தாங்க முடியாமல் எரிச்சல் வந்தது. எரிச்சலைக் கஷ்டப்பட்டுக் கட்டுப்படுத்திக்கொண்டு, 'தெருவுல போறப்போ கால்ல கல்லு முள்ளு எதுவும் குத்தாம இருக்கணுமேன்னுதான் செருப்பு போட்டுண்டு போறோம். முள்ளு குத்தணும்னு இருந்தாத் தானே குத்தப்போறது? அப்புறம் இவ்வளவு வெல கொடுத்து ஒரு செருப்பை வேற ஏன் வாங்கி வச்சுக்கணும்? வெளியில போறப்போ, வீட்டுக் கதவை எல்லாம் பூட்டி, சரியாய்ப் பூட்டினோமான்னு ஒரு தரத்துக்கு

ரெண்டுதரமா என்னத்துக்கு அதை இழுத்து ஆட்டிப் பாத்துட்டுவேற போகணும்?' என்று கொஞ்சம் கிண்டலாய்க் கேட்டேன்.

வீட்டுக்காரர் கொஞ்சம் சீரியஸான மாதிரி இருந்தது. எழுந்து அலமாரிப் பக்கம் போய் ஒரு பிளாஸ்டிக் டப்பாவிலிருந்து ஒரு 'ஜான்ஸன்ஸ் பட்'டை எடுத்துக் கொண்டு வந்து, என்முன் மறுபடியும் உட்கார்ந்து, அதால் காதை சுவாரஸ்யமாயக் குடையத் தொடங்கினார்.

'இப்ப நான் என்ன பண்ணணும், சொல்லுங்கோ...' என்று கேட்டார்.

நான் சொன்னேன்: 'அந்தச் சாக்கடை இந்த அளவுக்குப் பெரிசானதுக்குக் காரணமே அதுக்கு இரண்டு பக்கமும் சரியாக் கரை கட்டாததுதான்னு எனக்குப் படறது. சுத்தி இருக்குற மண்ணெல்லாம் கலந்து சாக்கடை முழுக்கவும் அடைச்சிண்டிருக்கு. அப்புறம் இது தெருச் சாக்கடையில் போய் விழற இடத்துல தரை கொஞ்சம் மேடாயிருக்கு. ஒரு மேஸ்திரிய விட்டா, ஸ்லோப்பைத் தண்ணி ஓடறமாதிரி இறக்கி வச்சு, சாக்கடைக்கு ரெண்டு பக்கமும் சிமிண்டுல கொஞ்சம உசரத்துக்கு கரைகட்டிடுவான். அப்புறம் மண்ணு சாக்கடையில கலக்காது. சின்னதா நாலு ஸ்லாப் பண்ணி சாக்கடையை மேல் பக்கமா மூடவும் செஞ்சிடலாம். கொசு மொய்க்கறதும் கொறையும்...'

'இதுக்கெல்லாம் நெறைய செலவு ஆகுமே சுவாமி!' என்று கொஞ்சம் குரலை உயர்த்திக் கேட்டார்.

'என்ன ஒரு ஐந்நூறு ரூபா ஆகும். குழந்தைகளுக்கு உடம்புக்கு ஏதாவது வந்து டாக்டருக்கு செலவு செய்யறதுக்கு பதிலா இதுக்கு செலவு செய்யலாமே...?'

இந்த சமயத்தில் வீட்டுக்காரரின் மச்சினன் உள்ளே யிருந்து கூடத்துக்கு வந்தவன், 'இல்லேன்னா மட்டும் அதெல்லாம் வராதோ! கேக்கறேன். ஆத்துச் சாக்கடையை ரிப்பேர் பண்ணி மூடிடறதாகவே வச்சிப்போம். தெருவுல ஓடற சாக்கடையை என்ன பண்றது?'

என்றான்.

இவர்களிடம் பேசுவதில் எந்த லாபமும் இல்லை என்று முடிவு செய்து கீழே வந்தேன். ஒருவேளை நான் தான் இதை எல்லாம் பொருட்படுத்தி பெரிதுபடுத்திக் கொள்கிறேனோ என்று தோன்றியது. சாக்கடைகளோடு சௌஜன்யமாய், சிநேகமாய் வாழப் பழக்கிக் கொள்வதுதான் இந்தியத் தன்மையோடு வாழ்வதாய் அர்த்தமோ?

ரொம்ப நேரம் இரவில் தூக்கம் வரவில்லை. மனைவியிடம் மெதுவாய்ப் பேச்சுக் கொடுத்தேன். 'பேசாம இந்த வீட்டைக் காலி பண்ணிடுவோமா? வீட்டுக்காரன் ரொம்ப இன்டிஃபரண்டா இருக்கான். இந்த சாக்கடையைப் பற்றி எவனும் கவலைப் படறாதாவே தெரியலே...'

அவள் இந்தப்புறம் திரும்பாமலேயே பாதித் தூக்கத்தில் பேசுகிற குரலில் பேசினாள். 'நெஜமாகவே நீங்கதான் ரொம்பவும் சின்னச் சின்ன விஷயங்களுக் கெல்லாம் மண்டையைப் போட்டுக் குழப்பிக்கிறேள். இந்த வீடு ஸ்டேஷனுக்குப் பக்கத்துல இருக்கு. ஒரு சௌகரியம் பார்த்தா இன்னொரு சௌகர்யம் இருக்காது. அட்வான்ஸ் வேற அய்யாயிரம் பத்தாயிரம்னு வாய் கூசாமக்கேப்பான். நீங்க புதுசாப் பாக்கற வீட்டுல மட்டும் சாக்கடை இருக்காதுன்னு என்ன நிச்சயம்? பேசாமல் கண்ணை மூடிண்டு, தூங்குங்கோ...'

எனக்கு ரொம்ப ஆச்சரியமாய் இருந்தது. எப்படி இவர்கள் எல்லோருமே ஒன்று போலவே சுற்றுப்புற பிரச்சினை அற்று, எந்தச் சூழலுக்கும் ஏற்றபடித் தங்களை வெகு இயல்பாக பொருத்திக் கொள்கிறவர்களாய் இருக்கிறார்கள் என்று.

ஒருவேளை அவள் சொல்வதில் உண்மையும்கூட இருக்கலாம். சாக்கடைகளிலிருந்து தப்பிப்பது என்பது முடியவே முடியாத காரியமோ?

நான் எப்போது தூங்கினேன் என்று தெரியவில்லை. திடீரென்று கொல்லைப்புறச் சாக்கடை அகன்று

பெரிதாகி விஸ்வரூபமெடுத்து கன்னங்கரிய பயங்கர உருவத்தோடு வீடு முழுவதும் பரவி, நான், என் மனைவி, குழந்தைகள் எல்லோரும் அதில் சிறிது சிறிதாய் முழுகி மூச்சுத் திணறுகிற மாதிரி இருந்தது. கை கால் எல்லாம் முடை நாற்றம் அடித்தது. குமட்டுகிறார் போல் வாய்வழியாய் எதுவோ வயிற்றுக்குள் போயிற்று.

நான் திடுக்கிட்டு உடம்பு நடுங்க கண் விழித்த போது, என் ஏழுவயசுப் பெண் என்னைத் தொட்டு உலுக்கிக் கொண்டிருந்தாள். 'அப்பா, அப்பா கொல்லைப் பக்கம் பாரேன். ஒரே நாத்தம் அடிக்கிறது எதையோ எடுத்து எடுத்து வெளியே கொட்டறா...'

நான் பரபரப்போடு கொல்லைப் பக்கம் போனேன். கொல்லைக் கதவைத் திறக்கிற பொழுதே குமட்டிக் கொண்டு பீ நாற்றம் அடித்தது. மெதுவாய் எட்டிப் பார்த்தேன். வேலை ரொம்ப மும்முரமாய் நடந்து கொண்டிருந்தது. இரண்டு முனிசிபாலிட்டி தொழி லாளிகள் செப்டிக் டாங்கைத் திறந்து அதிலிருந்து வாளிவாளியாய் மலத்தை அள்ளி எடுத்து, கொல்லைப் புறத்திலேயே செடிகளுக்குப் பக்கத்தில் மண்ணில் கொட்டிக் கொண்டிருந்தார்கள். ஒருவன் ஒரு பாட்டிலில் இருந்து மண்ணெண்ணெயை அதன்மீது கவிழ்த்துக் கொண்டிருந்தான். நாற்றம் தெரு முழுக்கவும் அடித்தது. சற்றுத் தள்ளி வீட்டுக்காரரும் அவர் மச்சினனும் ஒரு கைக்குட்டையால் மூக்கைச் சுற்றி கட்டிக் கொண்டு, வேலையை மேற்பார்வை பார்த்துக் கொண்டிருந்தனர்.

நான் மூக்கை கைகளால் மூடியபடியே, 'என்ன சார் இது? இப்படிப் பீயை வீட்டுக்குள்ளேயே கொட்டறான்?' என்று அதிர்ச்சியோடு கேட்டேன்.

அவர் திருவாய் மலர்ந்தார். 'செப்டிக் டாங்க் ரொம்பிடுத்து சார். அஞ்சு வருஷத்துக்கு முன்னால க்ளீன் பண்ணினது. அதான் வரச்சொல்லி இருந்தேன். எல்லாத்தையும் வண்டியில் அள்ளிண்டு போறதுன்னா ஐந்நூறு ரூபா கேக்கறான் சார். சரி, இருநூறு ரூபாய்

தரனே, இங்கேயே கொட்டிட்டு மண்ணெண்ணையை மேலே ஊத்திட்டுப் போன்னேன். செலவுக்கு செலவும் மிச்சம், தோட்டத்துக்கு எருவும் ஆச்சு...'

நான் ஒன்றும் பேசாமல் தலையில் அடித்துக் கொண்டு உள்ளே வந்தேன்.

நாற்றம் இரண்டு மூன்று நாட்களுக்கு வீட்டு சமையல் அறை வரைக்கும் அடித்துக் கொண்டிருந்தது. தினமும் காலையில் பாதிமுகத்தை முன் எச்சரிக்கையோடு மூடியபடி, புழைக்கடையில் மலம் எருவாகி விட்டதா என்று ஆர்வத்தோடு என் குழந்தைகள் பார்ப்பதும் வழக்கமானது. அவ்வப்போது வந்து 'எரு எப்படி இருக்கும்பா?' என்று என்னைக் கேட்டு எரிச்சல் படுத்தவும் செய்தனர். ஆனால் என்னுடைய ஆச்சரிய மெல்லாம், ஆரம்பத்தில் இவர்கள் எப்படி செப்டிக் டாங்கையே செலவு செய்து கட்டினார்கள் என்பதி லேயே இருந்தது.

நாலைந்து நாட்கள்தான் ஆகியிருக்கும். பக்கத்துப் போர்ஷனில் இருக்கும் தாத்தாவின் கடைசிப் பையனின் ஒண்ணரை வயதுக் குழந்தைக்கு, இருந்தாற்போலிருந்து கடுமையாய் ஜுரம் வந்துவிட்டது. எதைக் கொடுத் தாலும் குழந்தை வாந்தி எடுத்தது. உடம்பு நெருப்பு மாதிரிக் கொதிக்க ஒரு நிலையில் கண்கள் அப்படியே மேலே செறுகிக் கொண்டு விட்டன. எல்லோரும் அலறி அடித்துக் கொண்டு குழந்தையைப் பக்கத்தில் இருந்த நர்சிங் ஹோமுக்குக் கொண்டு போனார்கள். பாட்டி பெரிதாய் அழுது கொண்டு ஒரு மஞ்சள் துணியில் வைத்தீஸ்வரன் கோவிலுக்கு காசு முடிந்து வைத்தாள்.

சாயங்காலமாய் வேலையிலிருந்து திரும்புகிற வழி யில், நான் நர்சிங்ஹோமுக்குச் சென்று பார்த்தேன். இப்போது கொஞ்சம் தேவலை என்றார்கள். குழந்தை சுருங்கி துணி மாதிரி சின்னதாய்த துவண்டு படுக்கை யில் படுத்துக் கொண்டிருந்தது. கால் நரம்பில் ஊசி குத்தப்பட்டு க்ளூகோஸ் ஏறிக் கொண்டிருந்தது. குழந்தையின் அம்மா, வாடின முகத்தோடு பக்கத்தில்

உட்கார்ந்திருந்தாள். 'குழந்தைக்கு என்னவாம்?' என்று மெதுவாய்க் கேட்டேன். 'ஏதோ இன்ஃபெக்ஷன்னு சொல்றா...?'

பக்கத்தில் தாத்தா, பாட்டி, மாமா, மாமி எல்லோரும் இருந்தார்கள். 'ஒரு வயசுக்குள்ள போயி வைத்தீஸ்வரன் கோயில்ல முடி எடுக்கறது நம்மாத்துப் பழக்கம். குழந்தைக்கு ஒண்ணரை வயசாயிடுத்து. இன்னும் பண்ணலே. தெய்வக் குத்தம் தான் இப்படிப் படுத்தறது... அடியே, பத்மா... குழந்தைக்கு நன்னாத் தேவலை யானதும் கோயிலுக்குக் கூட்டிண்டு வந்து முடி எறக் கிடறேன்னு வைத்தீஸ்வரன் கிட்ட வேண்டிக்கோடி...' என்றாள் பாட்டி.

'போன வாரமே சொன்னார், நம்ம பழவந்தாங்கல் நடேச சாஸ்திரிகள், குழந்தைக்குக் கொஞ்சம் கிரக தோஷம் இருக்கு; ஒரு நவக்கிரஹ ஹோமம் பண்ணி சாந்தி பண்ணணும்னு... குழந்தைக்கு உடம்பு சரியான வுடனே முதல் வேலையா வர ஞாயிற்றுக்கிழமை ஆத்துல ஹோமம் பண்ணிடணும். என்ன விசாலம், சரிதானே...' என்று பாட்டியிடம் கேட்டார் மாமா. பாட்டி தாத்தா இரண்டு பேருமே சந்தோஷமாய்த் தலையை ஆட்டினார்கள். வேறு ஏதோ சொல்ல வாயெடுத்த நான் இவர்கள் எல்லாம் சொன்ன காரணங் களைக் கேட்டு அதிர்ச்சி அடைந்தோ என்னமோ ஒன்றும் பேசாமல் வீடு திரும்பிவிட்டேன்.

நாலு நாட்கள் குழந்தையை நர்சிங் ஹோமில் வைத்திருந்தது, நன்கு கவனித்து முழுக்கவும் குணமான பின், சனிக்கிழமை காலையில் வீட்டுக்குக் கூட்டி வந்தார்கள். நர்சிங்ஹோம் செலவு மட்டும் நாலாயிரம் ரூபாய்க்கு வந்துவிட்டதாகச் சொன்னார்கள். இரண்டு பக்கத்துக்கு மருந்துச்சீட்டில் வகைவகையாய் ஆன்டி பயாடிக் எழுதிக் கொடுத்திருந்தார்கள். இனிமேல் குழந்தையை, மறுபடியும் இன்ஃபெக்ஷன் ஆகாமல் பார்த்துக் கொள்ள வேண்டும் என்று டாக்டர் கடுமை யாய் எச்சரித்திருப்பதாவும் அவர்கள் பேசிக் கொண்டி

ருந்தார்கள். கொஞ்ச நேரத்திலேயே, பழவந்தாங்கல் நடேச சாஸ்திரிகள் தொப்பையும் தொந்தியுமாய் 'ஹீரோ ஹோண்டா'வில் வந்து இறங்கினார். அவரைப் பார்த்தவுடனேயே வீடே களைக்கட்டியது. எல்லோரும் சாஸ்திரிகளை உற்சாகமாய் வரவேற்று உள்ளே அழைத்துக்கொண்டு போனார்கள்.

சாஸ்திரிகளுக்குப் பாட்டி சுடச்சுட ஸ்ட்ராங்காய்க் காபி போட்டுக் கொண்டு வந்து வைத்தாள். சாஸ்திரிகள் பஞ்சாங்கத்தை எடுத்துப் புரட்டினார். எதையோ மனசால் கணக்குப் போடுகிறவர் மாதிரி, கைவிரல் களைக் காற்றில் ஆட்டிக் கண்களைச் சுழற்றித் தனக்குத் தானே என்னவோ மெதுவாய் முணுமுணுத்தார்; பிறகு, 'நீங்க ஒண்ணும் கவலைப்படத் தேவையில்லை. நாளைக்கு ஞாயிற்றுக்கிழமையே நவக்கிரக ஹோமம் பண்ணிடலாம். பிள்ளையாண்டான்களுக்கும் லீவாய் இருக்கும். நாலு பிராமணாளைச் சாப்பிடச் சொல்லிடறேன். காலம்பற ஏழு மணிக்குள்ளே குளிச்சு விபூதி இட்டுண்டு மடியாத் தயாரா இருக்கச் சொல்லுங்கோ, உங்கள் பிள்ளையாண்டானை. உங்க தோஷமெல்லாம் நாளையோட ஓடிப்போயிடறது பாருங்கோ...' என்று தாத்தாவிடம் சத்தம் போட்டுச் சொன்னவர், காபியை எடுத்து வாய்க்கருகில் கொண்டு போனார். 'மாமா, காபி ரொம்ப சூடா இருக்கு. ஆத்திட்டு குடிங்கோ...' என்றார் பாட்டி.

அன்று ராத்திரி நான் வெகுநேரம் எதை எதையோ தீவிரமாய் யோசித்தபடி தூக்கம் வராமல் புரண்டு கொண்டிருந்தேன். எல்லாவற்றையும் விட ஒரு மாபெரும் கேள்வி என் சிற்றறிவை ரொம்பவும் தொந்தரவு செய்தது. 'எங்கேயோ கோடிக் கணக்கான மைல் தள்ளி இருக்கும் ஒரு கிரகம் தங்களைப் பாதிப்பதாய் நம்புகிற இவர்கள் ஏன் பத்தடி தள்ளி இருக்கிற ஒரு சாக்கடை, தங்களைப் பாதிக்கும் என்பதை நம்ப மறுக்கிறார்கள்?'

காலையில் கண்விழித்த போது, பக்கத்துப் போர்ஷனி

லிருந்து வேத கோஷம் கேட்டது. உள்ளேயிருந்து ஹோமப்புகை சுருள்சுருளாய் வெளியேறிக் கொண்டிருந்தது. வாசல் வராண்டாவில் இரண்டு மூன்று பெஞ்சுகள் போடப்பட்டு, அவற்றில் வீட்டுக்காரரின் அக்கம் பக்கத்துச் சொந்தக்காரர்கள் எல்லாம் உட்கார்ந்து கொண்டு கைகளில் காலைச் செய்தித் தாள்கள் சகிதம் பெரிதாய்ச் சிரித்து அரட்டை அடித்துக் கொண்டிருந்தார்கள். பெண்கள் தழையத் தழைய குதிகால் சதைகள் மட்டும் எடுப்பாய்த் தெரிகிற மாதிரி மடிசார் கட்டிக் கொண்டு வாசலுக்கும் கொல்லைக்குமாய் சுறுசுறுப்பாய் இயங்கிக் கொண்டிருந்தார்கள். பக்கத்துப் போர்ஷன் சமையலறையிலிருந்து அதிரசமும் வடையும் எண்ணெயில் வேகிற சத்தமும் வாசனையும் வந்தன.

நான் டவலை எடுத்துக் தோளில் போட்டுக் கொண்டு, பல் தேய்ப்பதற்காகக் கொல்லைப் பக்கம் போனேன். ஹோம மந்திரங்கள் அங்கேயும் கேட்டன. ஆனால் அதிரச வாசனைக்குப் பதிலாய் வேறு ஏதோ வாடை தூக்கலாய் அடித்தது. என்னையும் மீறி என் கண்கள், முந்தின வாரம் முனிசிபல் தொழிலாளி செப்டிக் டாங்க்கிலிருந்து வாளி வாளியாய் மலத்தை வெளியே எடுத்துக்கொட்டிய திசையில் சென்றன. வழியில் தவிர்க்க முடியாமல் சாக்கடையும் கண்ணில் பட்டது. சாக்கடையில் இப்போது புதிதாய்க் குட்டிகுட்டியாய் நிறையப் புழுக்கள் உற்பத்தியாகி, ரொம்ப சந்தோஷமாய் நெளிந்து கொண்டிருந்தன.

●